

# மூலிகை மணி

வேலூர் மருத்துவர் :- ஆ.இரா.கண்ணப்பர்



நள வருஷ ஆவணி மீ ஆகஸ்ட் 76

மலர்:12 இதழ்:10

விலை 50 காசு

## தேள் கொடுக்கு

### 197-வது மூலிகை

# 'மூலிகை மணி'

[தமிழ் மருத்துவத் திங்கள் இதழ்]

ஆசிரியரும் வெளியிடுபவரும்

தினமணி புகழ்

வேலூர் மருத்துவர் ஆ. இரா. கண்ணப்பர், R.M.P.

ஆண்டு சந்தா ரூ. 6-00 தனி இதழ் 0-50 பைசா


## ஆவணி இதழில்

(சிறப்புக் கட்டுரைகள்)



மேல் அட்டை: ஓவியர் விஸ்வநாதன் D.F.A.

## மூலிகைமணி சந்தா விபரம்

| உள் நாடு | மலேஷியா, சிங்கைக்கு |
|---|---|
| 1 ஆண்டு 6-00 | கப்பல் வழி 13-20 விமான மூலம் 20-40 |
| 3 ஆண்டு 18-00 | கப்பல் வழி 39-60 விமான மூலம் 61-20 |
| ஆயுள் சந்தா ரூ. 160 | ஆயுள் சந்தா ரூ. 200 (கப்பல் மூலம்) |


தலைமை அலுவலகம்: மூலிகை மணி வேலூர் - 632001
சென்னை அலுவலக முகவரி: மூலிகை மணி, 7, அருளாம்பாள் தெரு, தி. நகர், சென்னை - 600 017.
தொலை பேசி: 445689 (சென்னை)

உ

# ஆனந்தம் ஒன்றே நிலைக்குது!

✱

ராகம்: சாரங்க] [தாளம்: ஆதி

பல்லவி

கீத ஒலிதன்னில் உன்றன் பெருமையெல்லாம்
கேட்கவே துன்பம் கறையுதடா முருகா; (கீத

அநுபல்லவி

சீதளப் பொய்கை மலர்ந்த தாமரையிலும் நின்
திருமுகம் ஒன்றே தெரியுதடா முருகா! (கீத)

சரணம்

குமரா குமரா எனக் கூவி அழைத்தாலும்
குகா குகா என உருகிக் கனிந்தாலும்
அமரா என ஆடியே பாடினாலும்
ஆனந்தம் ஒன்றே நிலைக்குதடா முருகா! (கீத)

கவிக்குயில் தேவராசன்.

## மூலிகைமணி ஆசிரியர் அவர்களிடம் நேரில் வந்து ஆலோசனை பெறவிரும்பும் அன்பர்கட்கு

சென்னையில் அனைத்து நாட்களிலும் சந்தித்து
மருத்துவ ஆலோசனையும் சிகிச்சையும் பெறலாம்.
காலை 9 மணி முதல் 12 மணி வரை
பகல் 3 மணி முதல் 5 மணி வரை
ஆலோசனைக் கட்டணம் உண்டு
தொலைபேசி : 445689

பஸ் ரூட் :

9, 10, 47, 47A திருமலைபிள்ளை ரோடில் மணியம்ஸ்டோர் ஸ்டாப்பிங்கில் இறங்கினால் இரண்டு நிமிடத்தில் மேற்கண்ட முகவரிக்கு வந்து விடலாம்.

கோடம்பாக்கம் ரயில் நிலையத்திலிருந்து ஹபிபுல்லா ரோடு வழியாக வரலாம்.

மற்ற பஸ் ரூட்கள் :

17, 17B, 17C, 17D, 11D, 25, 25B, 25C, 37, 37B, 37D, என்கிற பஸ்ஸில் ஏறி மாட்டு ஆஸ்பத்திரியில் இறங்கி வரலாம்.

ஆஸ்துமா, குன்மம், மேக நோய்கள், மூலம் கண்நோய்கள் போன்றவைகளுக்கு குறிப்பிடத்தக்க வகையில் மூலிகை சிகிச்சை அளிக்கப்படும்.

**மருத்துவர் : ஆ. இரா. கண்ணப்பர், R.M.P.**

7, அருளாம்பாள் தெரு, தி. நகர்
சென்னை-17—தொலைபேசி : 445689.

---

எமது மருந்துகளும் வெளியீடுகள், பழைய மூலிகைமணி இதழ்களும் கீழ்கண்ட இடங்களில் கிடைக்கும்.

மூலிகைமணி
7, அருளாம்பாள் வீதி,
தியாகராய நகர்
சென்னை - 600 017.

மூலிகைமணி
3, திருமலைப்பிள்ளை ரோடு
(வாணி மகால் அருகில்)
தி. நகர், சென்னை - 600 017.

உ
முருகா
ஓம் ஸ்ரீம் சௌம் சரவண பவாய ஞானஸ்கந்த குமாராய நம;
ஐந்துகரத்தினை யானை முகத்தனை இந்தினிளம்பிறை போலுமெயிற்றினை
நந்திமகந்தனை ஞானகொழுந்தனை புந்தியில்வைத்தடி போற்றுகின்றேனே




எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே. —(தாயுமானவர்)

மலர் 12] நள ஹூ ஆவணி மீ ஆகஸ்ட்-76 [இதழ் 10

### "ஆளுநரின் ஆலோசனைக்கு...."

# 'அவர்களை வாழ விடுங்கள்'

மூலிகை மணி இதழ் தொடங்கி 13 ஆண்டுகளாகின்றன. இதற்குள் மூன்று வித ஆட்சிகள் அமைந்து விட்டன. முதலில் காங்கிரஸ் கட்சியும், பிறகு தி. மு. க. கட்சியும், தற்போது உள்ள ஆளுநர் ஆட்சி, என மூவகை ஆட்சி இப்பன்னிரெண்டு காலத்திற்குள் அமைந்தன. என்றைக்குமே 'மூலிகைமணி' கட்சிகளின் அரசியலைப் பற்றியோ, அல்லது ஒரு சார்பு பற்றிய அரசியல் விமர்சனங்களையோ மேற்கொண்டதில்லை. மூலிகைமணியின் நோக்கமெல்லாம், எந்தக் கட்சியின் ஆட்சி நல்லது என்ற ஆராய்ச்சி அல்ல.

எந்த ஆட்சியும் சித்த மருத்துவ வளர்ச்சிக்கு என்ன செய்தது; எதைச் செய்ய வேண்டுமென்று எடுத்துரைப்பது தான். அவ்வகையில், முந்தைய ஆட்சிகள் செய்ததை, செய்யத் தவறியதையெல்லாம் அவ்வப்போது உரிய காலத்தில் எடுத்துரைத்து வந்துள்ளது.

தற்போது தமிழகத்தில் உள்ள பல்லாயிரக்கணக்கான பரம்பரை மருத்துவர்களின் வாழ்வுக்கு நிரந்தரமான தீர்வு கண்டிட, மேதகு தமிழக ஆளுநர் அவர்களின் ஆலோசனைக்கு

கீழ்க்கண்ட பிரச்னையை வைக்கின்றோம். அவர் இதன்பால் முழு பரிவுடன் இப்பிரச்னையைத் தீர்த்து வைப்பார்—வைக்க வேண்டுமென்றே இதனை எழுதுகின்றோம்.

இந்தியாவின் மக்கட்தொகை ஏறக்குறைய 60 கோடியாகும். இதில் பெரும்பான்மையான மக்கள் கிராமங்களில் தான் வாழ்கின்றனர். நகரங்களில் வாழும் மக்களுக்குப் போதிய மருத்துவ வசதி கிடைக்க வாய்ப்புள்ளது. அதிலும் கடந்த 20 ஆண்டுகளாகத் தான் நகரங்களில் கூட தற்கால மருத்துவ வசதி கிடைக்கின்றதேயொழிய, 20 ஆண்டுகட்கு முன்னர், நகர மக்களையும் சரி, நாட்டுப்புற மக்களையும் சரி, நோயிலிருந்து காப்பாற்றி வந்த அரிய பெருமை— பரம்பரை பரம்பரையாக வளர்ந்து வரும் நாட்டு மருத்துவர்களையே சாரும். இதனை இன்றைய மக்கள் மறந்தாலும் வரலாற்று ஆசிரியர்கள் மறக்கவில்லை. இந்திய மருத்துவர்களைப்பற்றி ஆய்வு செய்த பேராசிரியர், சைகிரெஸ்ட் எனும் மேனாட்டறிஞர் இந்நாட்டு மருத்துவர்கள் மக்களுக்கு ஆற்றி வரும் அரிய பணி பற்றிக் கீழ்க்கண்டவாறு புகழ்ந்துள்ளார்.

---

'Prof. Sigrist advocates that,' "In india ancient and medieaval medicines are still alive and are practised on a large scales; it is no exaggeration to say that overwhelming majority of the people of india, receive medical care from indigeneous practitioners.

---

இன்றைக்கு 20 ஆண்டு காலத்திற்குள் ஆங்கில மருத்துவ மோகத்தில் மூழ்கிய பலர், பல காலம்; நற்பணி புரிந்த நம் முன்னோர்க்கு நல்வாழ்வு அளித்த பரம்பரை மருத்துவர்களைப் புறக்கணித்து விட்டனர். தெரிந்தோ, தெரியாமலோ, நமது அரசாங்கமும், பரம்பரை மருத்துவர்களைப் பற்றி எவ்வித அக்கறையும் எடுக்கவில்லை. குறிப்பாகத் தமிழகத்தில், கடந்த 10 ஆண்டுகளாகத் தான் 'பரம்பரை மருத்துவர்'களைப் பதிவு செய்யும் திட்டத்தை ஆரம்பித்து- 1973-ல் அதனையும் மூடி விட்டார்கள்.

பரம்பரை மருத்துவர் பதிவு பற்றிய செய்தி பலருக்கு அது தொடங்கிய நாளும் தெரியாமல், முடிந்த நாளும் தெரியாமல்-இறுதியில் தற்போதைய சட்டங்களின் கெடுபிடியால் (Drugs and magic remedy act) தொழிலைக்கூட நடத்த முடியாமல் அன்றாட வாழ்வுக்கும் வழியின்றி தவிக்கின்றனர்.

---

" There is a saying that the herb that grows in our own back yard is no medicine. There is a tendency to look to others for remedies But in true development, one must make the best use of resources, which are at hand and are easily available. " —Indira Gandhi.

---

'நம் நாட்டு மருத்துவ முறைகளின் மீது நம்பிக்கை வைத்து அதனைப் பயன் படுத்த வேண்டும்' என்று வலியுறுத்தும் பிரதமர் இந்திரா காந்தியின் மேற்கண்ட கருத்திற்கு வடிவம் கொடுத்திட தமிழக ஆளுநர் முயல வேண்டும்.

20 அம்ச திட்டங்களால் நாட்டிலுள்ள கொத்தடிமைகளுக்குக் கூட வாழ வழி கிடைக்கும்போது,

நாட்டின் நல்வாழ்வுக்கும் இன்றும் கூட கிராமங்களில் வாழும் கோடிக்கணக்கான மக்களுக்கு அரசாங்கம் தர முடியாத மருத்துவ வசதிகளை, எவ்வித உதவியுமின்றி அளித்து வரும் பரம்பரை மருத்துவர்களுக்கு ஏன் நல்வாழ்வு கிடைக்கக் கூடாது! என்பதே மூலிகை மணியின் கேள்வி!

எனவே, ஆளுநர் அவர்கள் உடனடியாக, கீழ்க் கண்ட பிரச்னையை ஆலோசித்து தக்க நடவடிக்கை எடுக்கக் கோருகிறோம்.

(1) 1973-ம் ஆண்டு முதல் நிறுத்தி வைக்கப் பட்டுள்ள பரம்பரை மருத்துவர் பதிவுச் சட்டத்தை இன்னும் ஐந்தாண்டுகளுக்குப் புதுப்பித்து — தமிழகமெங்கி

லுமுள்ள பரம்பரை மருத்துவர்கள் பதிவு பெற வாய்ப் பளிக்க வேண்டும்.

(2) இப்பதிவுக்காக அரசாங்கம் நடத்தும் 'வாய் மொழித் தேர்வு' 'எழுத்துத் தேர்வுக்கு' - அரசாங் கமே, இந்திய மருத்துவத் துறை இயக்குனர் மூலம், 'பரம்பரை மருத்துவர் பதிவு - பயிற்சிப் பள்ளி' ஒன்றினை 5 ஆண்டு காலமும் நடத்தி அதன் மூலம்- பதிவு நடத் திடல் வேண்டும்.

இவ்விரண்டு திட்டங்களை ஆளுநர் அவர்கள் தீவிர கவ னம் செலுத்தி-உடனடியாக அமுல் நடத்திட வேண்டும்.

இவ்விரு திட்டங்களை ஆளுநர் அமுல் நடத்தினுல் தான் இந்திராவின் 20 அம்சத் திட்டம் பரம்பரை மருத்துவர்கட்கும் பலனளித்தது என்ற கருத்து— அவர்களிடையே எழுந்திட நிலவிட இயலும்.

- பிணியுற்றோரை வாழ வைக்கும் பரம்பரை மருத்துவர்களை—
- 'Drugs and magic remedy act' போன்ற சட் டங்களால் ஒடுக்காமல்—
- பரம்பரை மருத்துவர் பதிவு சட்ட அமுல் மூலம் வாழ வைப்பது ஆளுநர் ஆட்சிக்குரிய கடமை மட்டுமல்ல-
- பிரதமர் இந்திராவின் 20 அம்சத் திட்டத்திற் கும் உரிய வாழ்வாகும்.

(இதன் ஆங்கில மொழி பெயர்ப்பு, குடியரசுத் தலை வர், பிரதமர் இந்திரா காந்தி, மேதகு ஆளுநர் ஆகியோ ருக்கு அனுப்பியுள்ளது. வாசகர்களும், சித்த மருத்துவச் சங்கங்களும் இதனை வலியுறுத்தி ஆளுநருக்கு அனுப்பி தங்கள் ஆதரவைத் தெரிவிக்கக் கோருகிறோம்.)

# நோயும்-மருந்தும் !

வினு : பெரு மதிப்பிற்குரிய மூலிகை சக்ரவர்த்தி அவர்களுக்கு சென்னிமலை சென்னியப்பா டெக்ஸ்டைல் தொழிலாளி எழுதிக் கொண்ட கேள்வி. எனக்கு கடந்த பத்தாண்டுகளுக்கு முன்பு டி. பி. நோய் வந்தது. அதற்கு நிறைய ஊசி போட்டு மருந்து சாப்பிட்டு குணமானது. ஆனால் கடந்த 2-3 ஆண்டுகளாய் தலைச் சுற்றுகிறது. நடக்கும்போது கீழே தள்ளுகிறது. நானும் பல டாக்டரிடம் சென்று வைத்தியம் செய்து கொண்டேன். உடம்பில் எந்த வியாதியில்லை. வீக்னஸ் தான்என்று சொல்லி P பிட்டெல், நியுரோபியான் ஊசிகள் பி காம்பிளக்ஸ் சாப்பிடுங்கள் என்று சொன்னர். நானும் எல்லா ஊசியும், மாத்திரையும் சாப்பிட்டு பார்த்து விட்டேன் குணமில்லை. பிறகு ஆடியோகிராம் மூலம் காதை பரிசோதித்து விட்டு எனக்கு நரம்பு பாதித்திருக்கென்று சொல்லி காலை செப்பிடில் பகல் ஒரு மணிக்கு பெலோனின், இரவு ஆரோபிட் என்ற மாத்திரைகளை எழுதி கொடுத்தார்கள். அதை மூன்று மாதம் சாப்பிட்டு விட்டேன். குணமாகவில்லை. இப்போதெல்லாம் ஊசி போட்டவுடனே அலர்ஜி வந்து சாகிருர்களாம். நல்ல வேளை ! நான் சாகவில்லை. ஐயா, தங்களிடம் நான் வைதியம் செய்து கொள்ள ஆசை படுகிறேன். கல்யாணமாகி 10 ஆண்டு ஆகி விட்டது. குழந்தை 3 ஆண்டுக்கு முன் பிறந்து, இறந்து விட்டது. எனக்கு தக்க மருந்து கொடுத்து இந்த ஏழையை காப்பாற்ற வேண்டுகிறேன்.

விடை : ஐயா. நீங்கள் எழுதிய கடிதம் மூன்று பக்கத்திற்கு ஆகும் அதை வெகுவாக சுருக்கி விட்டேன். இவ்வளவு எழுதிய நீர் உமது வயதைக் குறிப்பிடவில்லை. உமது கடிதத்தின் சாரத்தைக் கொண்டு பதில் அளிக்கிறேன். உண்மையை விடாமல் சொன்னதற்கு மிக்க நன்றி இனி உங்கள் உடம்பு தமிழ் மருத்துவத்தின் மூலம் குணமாக வேண்டுமென்று நீங்கள் ஆசைப் பட்டால் கீழ்க்கண்ட முறையில் 1 மாதம் நீங்களே செய்து சாப்பிடுங்கள். அதனுல் உங்களுக்கு உடல் நலம் அடையும். ஆங்கில மருந்து முறியும் முறை விபரம்: பச்சை அருகம்புல் 1 கைப்பிடி, மிளகு நான்கு, சீரகம் ஒரு சிட்டிகை ஆகியவை சேர்த்தரைத்து

வெறும் வயிற்றில் நெல்லிக்காயளவு வாயிலிட்டு பால் சாப்பிடவும். இப்படி 1 மாதம் தொடர்ந்து சாப்பிட்டுவர நற்பயன் அளிக்கும். தமிழ் கடவுள் முருகனருள் கிடைக்க வேண்டுகிறேன்.

வினா: எனது தந்தை சுமார் 80 வயது. தற்போது அவருக்கு உடல் அரிப்பு தடிப்பு சொறிந்துவிட்டால் நீர் கசிவு, எரிவு- புண் ஆகி விடுகிறது. இரவில் தூக்கம் வராமல் சொறிந்து கொண்டிருக்கிறார். இதற்கு மூலிகை வைத்தியமோ மற்ற எதுவானாலும் தயவு செய்து கூறுங்கள்.

விடை: ஐயா, உங்கள் தந்தைக்கு சர்ம நோய் சொறிந்து விட நீர் கசிகிறபடியால் ரத்தம் கெட்டு வந்திருக்கும் நோய். இதற்கு பூவரசம் பட்டை 1 பலம் இடித்து குடிநீரிட்டு காலையில் 1 குவளை வீதம் உள்ளுக்கு குடிக்கச் செய்ய உணவில் மீன், மாமிசங்களை சிறிது நாளைக்கு நிறுத்தி வைக்கவும். இம்முறையில் குணம் காணவில்லையானால் எமது மகா மூலிகை எண்ணெயே சிறந்தது.

வினா: என் வயது 17. பிறவியிலிருந்து எனக்கு இதய துடிப்பு அதிகமாக உள்ளது. இதனால் எனக்கு மூச்சு அதிகமாக வாங்குகிறது. முழங்கால் வலியும் உள்ளது. முழங்கால் வலி யால் இதயம் பாதிக்குமென்பதாக கூறுகிறார்கள். மேலும் எனது மார்பு சற்று முன்பாகம் வந்துள்ளது. அடிக்கடி காய்ச் சல் வருகிறது. நெஞ்சில் சளி அதிகமாக உள்ளது. சளி அதிகமாக உள்ளதால் காது சரியாக கேட்கவில்லை. உடல் மெலிந்தும், முகத்தில் இடுக்குகள் விழுந்தும் இருக்கிறது. எப்பொழுதும் சோம்பலாக இருக்கிறேன். இவைகளைப்போக்க எளிய சிகிச்சை கூறவும்.

விடை: தம்பி, 17 வயதிலேயே உனக்கு 'தெற்குத்தி கணை' என்ற கணைச்சூடு பற்றி விட்டது. டாக்டர் இதற்கு டி. பி. என்று தான் கூறுவர். உனது கடிதத்தின் சாரம் கணை எலும்பைப் பற்றியுள்ளபடி யால் எளிய சிகிச்சைகள் பயன் தராது. தினமும் சளி நீங்க தூது வளையை நெய்யுடன் சமையலில் சேர்த்து வரவும். நல்ல தமிழ் மருத் துவம் செய்தால் பூரண குணம் கிடைக்கும்.

வினா: 'மன அமைதியும், வாழ்க்கையில் முன்னேற்ற மும்' காணுவது எப்படி? இதற்கு தங்கள் மூலிகை ரட்சை பயன் படுமா? கூறுங்கள்.

விடை: நல்ல மன அமைதியும் வாழ்க்கை முன்னேற்றமும் காண மூலிகை ரட்சை பயன் படாது. மனச்சுத்தம், நல்லொழுக்கம், பிறர் பொருளுக்கு ஆசை படா திருத்தல், நேர்மையில் நம்பிக்கை, எல்லாவற் றிற்கும் மேலாக கடன் படக் கூடாது. 'கடன் பட்டார் நெஞ்சம்போல்' என்பது கம்ப ராமாயண பாடல். எனவே எந்த விதத்திலும் கடன்படக் கூடாது. கடன் வாங்கி வியாபாரம் செய்து பெரும்பொருள் ஈட்டலாம். பிறகு கடன் அடைத்து விடலாம் என்பது முட் டாள்தனம். மனக்கோட்டை கட்டி கடன் வாங்குவது மன அமைதியைக் கெடுத்து விடும். மானம் போகும். கையில் பணமில்லையானால் வியாபாரம் செய்ய நினைக்காதே! கடுமை யாக உழைத்து பாடுபடு. படிப்பு இல்லையே என்று கவலை வேண்டாம்.

**உடம்பால் உழைத்து கூலி வேலையாவது செய்துசாப்பிடு அதில் தான் மன அமைதி உண்டாகும்.**

சும்மா உட்கார்ந்து கொண்டு அவனிடம் கடன் வாங்கலாமா? இவனிடம் கடன் கேட்டால் கொடுப்பானா? என்று ஏங்காதே! கடன் வாங்கி கொடுத் தவனும் மரமேறி கை விட்டவனும் ஒரே பலனை அனுபவிப்பான். எனவே உள்ளதைக் கொண்டு முன்னுக்கு வர யோசனை செய். கையில் இல்லா விட்டால் கடன் வாங்காதே! இதைவிட இன்னொரு மேலான அறிவுரை! வாங்கிய பொருளை நெருக்கடியில் வட்டிக்கு வைக்காதே! வட்டி கொடுத் தவன் மீள மாட்டான். இந்த குறிக்கோளைக் கொண்டால் வாழ்க்கை முன்னேற்றமும், மன அமைதியும் பெருவாய். மூலிகை ரட்சை என்பது பிறந்த நேரப்படி கோள்களின் நிலை சரியில்லாதவர்களுக்கும் அதனால் அடிக்கடி நோய்வாய் படுபவர்கள், விபத்துக்கள் தடுக்கவும், செய்வினை களைத் தடுக்கவும், ஏவல், திருஷ்டி கழியவும் சக்தி வாய்ந்த மூலிகை களால் முறைப்படி பூஜையில் வைத்து எடுப்பதாகும். அதிலும் இறைப் பற்றுடையவர்களுக்கு தான் பொருத்தும். நாத்திகத் தன்மையுடைய வர்க்கு பொருந்தாது.

வினா: என் முகம் முழுதும் அதிக அளவில் பருக்கள் தென்படுகின்றன. "கிளியரெசில்" என்ற இங்கிலீஷ் மருந்தை உபயோகித்தேன். மாற்றம் ஏதுமில்லை. இதனைப் போக்க என்ன வழி.

விடை: ஐயா, முகத்தில் காணும் பருக்கள் பருவமடைந்து காம விகாரத்தின் எண்ணச் சாயல்கள் தான் ஒன்று திருமணம் செய்து கொள் அல்லது காம எண்ணத்தை வெறுக்க மறக்க பழகுங்கள். பருக்கள் தானாகவே போகும். இப்பொழுது காணும் பருக்களை மறையச் செய்ய அம்மாம் பச்சரிசி என்ற மூலிகை பாலை காலை நேரம் பருக்கள் மேல் தடவி வாருங்கள் 1 வாரத்தில் மறையும்.

வினா: என் ஆணுறுப்பு இணையுமிடத்தின் பக்கத்தில் உருண்டையாக நீளமாக பெரிதான கட்டியாக காணப்படு கிறது இது என்ன? இதனைப் போக்க வழி என்ன?

விடை: அன்பரே! இது தான் தொடை வாழை கட்டி என்பது இது இயற்கை நோயல்ல! செயற்கையாகவே உண்டாக்கப்பட்ட நோய் V. D. என்று சொல்கிறார்களே! ஆங்கிலத்தில் அதில் ஒரு பாகம் விலை கொடுத்து வாங்கியதை! விலை கொடுத்து அறுவை சிகிச்சை செய்து கொள்ளுங்கள். ''உப்பைத் தின்றவன் தண்ணீர் குடிப்பான்'' என்ற பழமொழி போல அறுவை சிகிச்சை ஒன்று தான் இதற்கு ஏற்றவழி. கெட்ட வழி போனவர்கட்கு இறைவனின் இயற்கை தண்டனை இதுவே. தப்பிக்க வழியில்லை. பிறகு இது வாராமல் தடுக்க 'மகா மூலிகைஎண்ணை' சாப்பிட்டால் உடல் தூய்மையாகும் மறுபடி இந்த வழியில் நுழையாதீர்!

வினா: தலைக்கு குளிக்கும்போது வெள்ளை வெள்ளையாக வருகிறது என்ன செய்யலாம்? இள வழுக்கை வராமல் தடுக்க என்ன வழி?

விடை: ஐயா, இதற்கு நமது இதழில் 'சித்தர் இலகு மருத் துவம், என்ற தலைப்பில் பல்லாண்டுகளாக பல வித எளிய முறை எழுதி யுள்ளோம். அதனைப் பாருங்கள். அல்லது எமது 'அவுரி தைலம்' வர வழைத்து தடவுங்கள். எளிமையான ஆபத்தில்லாத முறை.

வினா: 'நாராயண மூலிகை என்பது தண்ணீர் விட் டான் கிழங்கு தான் என்கிறார்கள், சிலர் இல்லை என்கிறார்கள். அதுபோல ஆனை நெருஞ்சில் ஆனை வணங்கி இரண்டும் ஒன்று தானா? என்பது விளக்குங்கள்.

விடை: தண்ணீர் விட்டான் கிழங்கும் நாராயண மூலிகை இரண் டும் ஒன்று தான். ஆனை வணங்கியும்— ஆனை நெருஞ்சியும் ஒன்றுதான். சந்தேகமேயில்லை.




## 197-வது மூலிகை

# தேட் கொடுக்கு

தற்கால விஞ்ஞானம், விலங்கினத்தையும், தாவர இனத்தையும் சேர்த்து புதிய இனத்தைப் படைக்கும் ஆய்வில் ஈடுபட்டுள்ளதை செய்திகள் வாயிலாக அறிகிறோம். ஆனால் விலங்குகளின் அமைப்பில் உள்ள செடிகளுக்கு விலங்குகளின் பெயரையே முற்காலத்தவர் வைத்திருப்பதை அறியும்போது, விலங்கினத்தையும் தாவர இனத்தையும் இணைத்து சிந்தித்த முன்னோர் தம் அறிவை எண்ணி வியக்கலாம்.

கருடன் கிழங்கு, யானை நெருஞ்சில், இரு குரங்கின் கை, ஈயெச்சக் கீரை, எலிக்காதிலை, கம்பளிப் பூச்சிச் செடி, போன்ற பெயர்கள் இக்கருத்திற்குச் சான்றாகும். இவ்வகையில் 'நம் நாட்டு மூலிகைகள்' வரிசையில் இடம்பெறும் மூலிகை, 'தேட் கொடுக்கு' ஆகும். செடியின் வடிவ அமைப்பை நோக்கினால், இப் பெயர் பொருத்தம் எவ்வளவு உண்மை என்பது புலனாகும்.

### விபரம்

சிறு செடி இனத்தைச் சார்ந்தது. இந்தியாவின் பல பாகங்களிலும், எல்லா இடங்களிலும் வளரக் கூடியது. குறிப்பாக, வறட்சியான பகுதிகளில் கூட வளரக் கூடியது. வீட்டின் புறத்தேயும், பூங்கா மற்றும் சாலையோரங்களில் காணப்படும் இச் சிறு செடியினம், 1 அடி முதல் இரண்டு அடி வரை உயரம் வளரும் குத்துச் செடி வகையைச் சார்ந்தது. இலை புதினாவின் இலை போல் தடிப்பாகவும், ஆழ்ந்த கரும் பச்சை நிறத்திலும் காணும்; இலையின் ஒரங்களில் ரம்பம் போல் ஒழுங்கற்ற சிறிதும் பெரிதுமான பற்கள் காணப்படும். இலையின் மேற்புறம் சாதாரண இலை போல் இல்லாமல், புதினாவின் இலைக்குள்ளது போல் சுருக்கங்கள் காணப்படும். இலையின் கக்கங்களினும், குறிப்பாக, செடியின் 'முனையிலும், தேள்கொடுக்கு போன்ற அமைப்பில் சுருண்ட வடிவில் நரம்பு இரண்டு

பக்கம் காணும். இதன் காரணமாகத் தான் இதற்குத் தேட் கொடுக்கு இலே என்று முன்னோர் பெயரிட்டனர் போலும். பொதுவாக இச்செடி தை மாதம் முதல் சித்திரை மாதம் வரை மலரும். சிறு தேட் கொடுக்கு, பெருந் தேட் கொடுக்கு என இருவகையாக இதனைப் பிரிப்பார்கள். அட்டைப் படத்தில் காண்பது பெருந்தேட் கொடுக்கு ஆகும். இதுவே பெரிதும் மருத்துவப் பயனாகிறது.

## மருத்துவப் பயன்

இரு வகையாகப் பிரியும் தேட் கொடுக்கு பெரிதும் Venarel disease என்றும் sexually transmitted disease என்று அழைக்கப்படும் பல் வகை மேக நோய்களைத் தீர்க்கும் ஆற்றல் உடையதாகக் கருதப்படுகிறது. இதன் இலே, பூ, காய் ஆகிய மூன்றும் மருத்துவப் பயன் தருவன. இனிப்புச் சுவையைத் தரும் செடியினம். பொதுவாக குளிர்ச்சியை உடலுக்கு அளிக்கும். சிறுநீரை பெருக்கிடும் ஆற்றல் உடையது. உடல் வறட்சியைப் போக்கும் குணமுடையது.

## மருத்துவ முறை விபரம்

### சிறு தேட் கொடுக்கு

வெட்டைச் சூடு காரணமாகவும், தீய நடவடிக்கைகள் உள்ள பெண்களுடன் சேர்ந்ததால் வரும் கொருக்குப் புண், நமைச்சல், வெள்ளை ஒழுக்குப் பிரமேகம், ஆகிய நோய்கள் இதனால் ஒழியும்.

### முறை விபரம்

இதன் இலேயை மஞ்சள் சிறிது சேர்த்தரைத்து சொறி, சிரங்கு, புண் ஆகியவற்றின் மீது இரவில் பற்றுபோல் போட்டு- காலேயில் எழுந்ததும்— சீயக்காய் பொடியுடன் தேய்த்து குளித்து வர படிப்படியாக குணம் காணலாம்.

### எலும்புருக்கி நோய்க்கு

இதன் இலேயை மிளகு 6, சீரகம் 1 சிட்டிகையுடன் சேர்த்தரைத்து நெல்லியளவு சாப்பிட்டு ஆட்டுப்பால் 1 குவளை சாப்பிட்டுவர எலும்புருக்கி நோய் தணியும். புகை, காபி, டீ, மது ஆகியன நீக்கவும், இவ்விதம் 1 நாள் விட்டு 1 நாள் தொடர்ந்து 40 நாட்கள் செய்துவர, ஆரம்ப நிலேயில் உள்ள எலும்புருக்கி நோய் கட்டுப்படும்.

### பெருந்தேட் கொடுக்கு

இதற்கு சுடுகாடு மீட்டான் என்ற வேறு பெயரும் உண்டு. உடல் தாதுக்களை அழிக்கும் நுண்கிருமிகளை பெருந்தேட் கொடுக்கு அகற்றும் ஆற்றலுடையது.

## முறை. விபரம்

(1) முகப்பரு, இரணப்புண், அடிபட்ட புண் ஆகியவற்றிற்கு இதன் இலையை அரைத்து மேல் பூச்சாகப் பூசி வர, அவை ஆறும்.

(2) இலையை மட்டும் கற்கமாக அரைத்து தினம் காலையில் வெறும் வயிற்றில் 3 நாட்கள் சாப்பிட்டுவர காய்ச்சல் விலகும்.

(3) பனி, மழைக் காலங்களிலும் குளிர்ச்சியான உடல் வாகு கொண்டவர்கட்கும் அடிக்கடி வரும், டான்சில், தொண்டைப் புண், தொண்டை ரணம், தொண்டைக் கட்டு, ஆகியன நீங்கிட, இதன் இலையையும், பூவையும் குடிநீராக்கி இரண்டு மணி நேரத்திற்கு ஒரு முறை வாய் கொப்புளிக்க, அவை குணமாகும்.

## தேள் கடிக்கு - தேட்கொடுக்கு இலை

தேளின் பெயரையே கொண்டுள்ள இச் செடியின் இலைச்சாற்றை, தேள் கொட்டிய இடத்தில் பிழிந்து கட்டிவர, தேள் கடி நஞ்சு முறியும். இதன் காரணமாகக் கூட இச்செடிக்கு இப்பெயர் வந்திருக்கும் போலும்.

இதன் காயை நசுக்கி, குடிநீராக்கி தினம் காலை, மாலை, இருவேளை குடித்துவர, சுவாசம் காரணமாக வரும் மூச்சுத் திணறல் தணியும்

## குட்ட நோய்க்கு

வெட்டை நோய்த் தொடர்பாக வரும் கிரந்திப்புண், கொருக்குப் புண், ஆகியவற்றைப் போக்கும் திறன் வாய்ந்ததால், இதன் காய், பூ, இலை ஆகிய மூன்றையும் வில்வ இலையுடன் சேர்த்து குடிநீராக்கி தினம் 1 வேளை தொடர்ந்து அருந்திவர ஆரம்ப நிலையிலுள்ள குட்டநோய் குணமாக வழியுண்டு.

தேளின் பெயரைக் கொண்டிருந்தாலும், தேள் போன்று நஞ்சு உடையதல்ல; மாறாக நஞ்சுத் தன்மை வாய்ந்த தேள் கடியையும், அதனை விட கொடுமையான வெட்டை நோய்களையும் போக்குவதில்—தனித்திறன் வாய்ந்தது " தேட் கொடுக்கு " என்பதைத் திடமாக நம்பலாம்!

சுடுகாடு மீட்டான் எனப்பெரியோர் சொல்லும்
நொடியபெரும் தேட்கொடுக்கால் நீரரர்— பொடிக்கிருமி
புண்கிரந்தி மேகப்புண் பொல்லாக் கருங் கிரந்தி
விண்கரந்து போகாதோ விலர். (அ. கு.)

# மூலிகைக் காய கல்பம்

(முறை : போகர் 4-வது சத்தகாண்டம் பக்கம் 509-511 வரை)

(பொடி வகைகள்)

கல்பம் என்பது உடல் நோயற்று நீடிய நல்வாழ்வை அளிக்கும் சாதனமாகும். உலகெங்கிலும், பண்டைக் கால முதலே, பிணியினின்று உடலைக் காக்கவும், வாழ்நாளை நீடிக்கச் செய்யவும், முயன்றனர். தமிழில் 'காய கல்ப சாதனை' என்று சித்தர்கள் கூறுவர். இவைகளில் தலையாய கல்பம், எளிமையான கல்பம், 'மூலிகைக் காய கல்பம்' ஆகும். 2000 ஆண்டுகட்குமுன்னரே மூலிகைகளைக் கல்பமாகப் பயன்படுத்தியவர்கள் தமிழர்கள் என்பதை, புறநானூறு போன்ற இலக்கியத்தில்வரும் (ஔவையாருக்கு அதியமான், சாதல நீங்க கொடுத்த நெல்லிக்கனி வரலாறு) பாடல்கள் சான்று பகரும்.

சித்தர்கள் யோக நெறிக்கு உடலை பக்குவப்படுத்த பல மூலிகைகளைக் கல்ப சாதனமாகப் பயன் படுத்தினர். 'போகர்' எனும் சித்தர் இத்தகைய மூலிகைக் காய கற்பங்களை- 'போகர் சத்த காண்டம்' எனும் தலைப்பில் பாடியுள்ளார். அதனைக் கீழே காணலாம். எளிய பாடல்கள் விரைவில் பொருள் விளங்கும்.

'தானுன இன்னுமொரு கருமானங்கேள் சாற்றுகிறேன்
மாணுக்கன் பிழைக்கவென்று கோனுன எனதையர்—
காலாங்கிநாதர் குருபதத்தை தாள்பணிந்து வேனுன காய
கல்ப பொடியதனை, விருப்பமுடன் யானுரைப்பேன் பின்னும்
கேளீர் ! மானுன மகதேவ ரிஷிகள் தானும் மானிலத்தில்—
மறைத்து வைத்தார் பான்மையாமே. (178)

பான்மையாம் கொங்கணரும் மிந்தபாகம் பாரினிலே
களங்கமறச் சொல்லவில்லை ! மேன்மையுடன் அகஸ்தியரும்
புலஸ்தியனும் மேதினியில் விளக்கமறச் சொல்லவில்லை.
வாண்மையுடன் புலிப்பாணிக் கிந்தபாகம் ஆயிரத்துவன்
னுருக்குள்- நோன்மையுடனெனைப் போலச் சொன்னுரில்
லை நுட்பமதை மாந்தர்க்குச் சொன்னேன் பாரே. (179)

பாரேதான் சுக்குடனே வாய்விளங்கம் பாங்குடனே
திப்பிலியும் வசு வாசிதானும் நேரேதான் மிளகுடனே - தான்றிக்
காயும் நேரான கடுக்காயும் நெல்லிக்காயும், கூரே தான்
சித்திரமாம் மூலத்தோடு கொடிதான சிவதை வேர் சித்தாமுட்டி
விரேதான் வாலுளுவை சோம்பு யேலம், விருப்பமுடன் செந்
தோன்றி வேருமாமே. (180)

வேரான வெட்டிவேர் துத்திமூலம் வெளியான வாவாரை
பஞ்சமூலம், கூருன தாது மாதுளையின் வேருங் குணமா சேங்கொட்
டை சிவனுர்வேம்பு, நாரான செங்காலிவேரினேடு நறுங்கந்தம்
பினரிப்பட்டைதானும், பாரான பூதமாம் விருட்சத்தோடு பங்கான
வேரதுமாமே. (181)

ஆமேதான் கருங்காலி பட்டைதானும் அப்பனே செனுமறை
வேரினேடு, தாமேதான் வெம்பாடம் பட்டைதானும் தாக்கான
கொழிஞ்சிமிடபட்டைமூலம்வேமேதான்விராலியிடமூலந்தானும்விரை
யான பேய்மிரட்டி பட்டைமூலம் நாமேதான் சொன்னபடி அகிற்
கட்டைதானும் நலமான சந்தனமும் செஞ்சாந்துமாமே. (182)

சாந்தான பூவந்திபட்டை தானும் சதுரான வெண்ணுவல்
பட்டையோடு, சாந்தமெனும் வேங்கை பட்டை தானும்
கருவால உதிரமாம் மூலத்தோடு பாந்தமெனும் கொங்கலவன்
மூலத்தோடு

பளிங்கான விராலியிட மூலத்தோடு வேந்தர்கைக் கோலூன்றி—
விருட்சமூலம் விரைவான பட்சையுட மூலந்தானே. (188)

மூலமொடு கரும்பசலை செம்பசலை தானும் முஷ்டியுடன்
கருவாகை பெருவாகை தானும் சீலேமுட பற்படாம யிம்பூராவும்
சிறியானின் நங்கையுடன் பெரியாநங்கை காலமெனும் புளியாரை
சிறியாரை தானும் தன்மையுள்ள நிலவேம்பு கருவேம்பு தானும் பால
மெனும் பொடுதலையாம் சீந்திலோடு பசுமையாம் பொற்சீந்தி
நற்சீந்தியாமே. (184)

சீந்திலொடு செவ்வாழை கருவாழை தானும் சிறப்பான
உப்பதுவும் தானுமாகும், சாந்திமலர், நந்தியா வட்ட மூலம், சார்பு
டனே கொன்றைவேர், புன்னைவேரும் தாந்திகமுஞ் செங்கழுநீர்
பூண்டுதானும் தகமையுள்ள வட்டாரி துத்திமூலம், ஏந்தலெனு
மயிர்கொன்றை யிருவாட்சி தானும் யென்மகளே வகைக்கு
ஒரு பலமாய் தூக்கே. (185)

தூக்கையிலே தூக்கமது வதிகங்காண தொல்லுலகில் மூல
வகை சமனதாக, ஏக்கமுடன் மூல வகை ரெட்டிப்பாக யெழிலான
பொடி வகையாய் செய்து கொள்ள நோக்கமுடன் ரவி தனிலே
காயப்போடு நுணுக்கமுடன் கல்லுரலில் மாவதாக்கி பாக்கவே தான்
பொடி வகையை சுத்திசெய்து பசும்பாலில் புட்டவியல் செய்திடாயே
(186)

செய்யவென்றால் கை பாகஞ் செய் பாகங்கேள் செப்புகிறேன்
தளவாயாஞ் சட்டிதனில் பையயே யாவின்பால் பாண்டமிட்டு பாக
முடன் பொடிவகையை சீலே மேலே, மெய்யவே புட்டுபோல் பிசிறி
வைத்து முசியாமல் மேல் சட்டிகொண்டு மூடி. மெய்யவே
தானறிப்பாய் கண்ட மட்டும் மகளே தானெறிப்பாய்
புகலக்கேளே.

கேளேதான் ரவிதனிலே காயப்போடு கெணிதமு
னிப்பாகம் பத்து போடு கோளேதான் வாராப ற் சூரணத்தை
கொப்பெனவே தானெடுத்து செப்பக்கேளு பாளே தான்
சீனிசேர்த்து பதமுடனே மண்டலந்தான் கொண்டாயானால்
நாளே தான் தேகமது ஈற்றுணுகும் நளினமுடன் போகரிஷி
நவின்றவாரே! (188)

வாரான கற்ப மென்ற சூரணத்தை வாகுடனே
கொள்பவனும் சித்தனுவான் நேரான சீனபத மாந்தருக்கு
நேர்மையுடன் தானுரைத்த கற்பமாகும் சீரான கற்பமது
உண்ட பேர்க்கு தேசத்தில் வயதல்லோ லக்கோ யில்லை
காரான கடந்தமுனி சித்தரென்பார் காயாதி கற்பத்தின்
பான்மை தானே. (189)

முறையுடனே கற்பமதை வாங்கிக் கொண்டு மூதுலகில்
வெகுபேர்கள் செய்ய வெண்ணி கரைகண்ட வைத்தியன்
போல் மனதிலெண்ணி காசினியில் முறை கெட்டு தாறுமாறாய்
திரை மறைவு தெரியாமல் தேர்ந்தோன் போல திறமையுடன்
அனுபோகந் தெரியாமற்றான் குறை மனதாய் சூரணத்தை—
செய்துமே தான் குவலயத்தில் கெட்டவர்கள் கோடியாமே. (193)

குறிப்பு: இந்த சத்த காண்டத்தில் போகர் கூறிய மூலிகையும் வேரும் எழுபத்திஐந்து ஆகும். இத்தனையும் தெரிந்து வைத்து அனுபவ ரீதியாக செய்து முடிப்பதில் தான் வெற்றி காண முடியுமென்பது கருத்து.

# பொருள்களின்
# குண விளக்கம்

[ சென்ற மாதத் தொடர்ச்சி]

## தயிர் வகை



### பசுவின் தயிர் குணம்

பசுவின் றயிராற் பசிமிகவு முண்டாகு
மிசிவுறும் சீரணநோ யேகும்-பசையகன்ற
தாக மிளைப்பிருமல் தாங்கொணு மெய்யெரிவு
மேகு முலகி லியம்பு.

(இ-ள்.) பசுவின் தயிரால் பசியுண்டாகும். இசிவுசீரணரோகம் தாகம், ஆயாசம், காசம் எரிச்சல் இவை நீங்கும்.

### ஆடையெடுத்த தயிர்குணம்

ஆடையெடுத்த தயிர்கய மிளைப் பறுக்கும்
நாடு கிரிச்சரத்தை நாடவொட்டா-தாடொலியா
லுண்டாங் கிராணியுறை மேகம் போக்கிவிடுந்
தண்டார் குழலணங்கே சாற்று.

(இ-ள்.) குளிர்ந்த மாலேயணிந்த கூந்தலேயுடைய பெண்ணே! ஏடு நீங்கிய தயிரானது சிலேஷ்மரோகம் ஆயாசம் மூத்திரக்கிரிச்சரம் வாதகிராணி குஷ்டரோகம் இவைகளை நீக்குமென்க.

### எருமைத்தயிர் குணம்

எருமைத் தயிருக் கெவுரி பித்தம்போம்
வருமைக் கரப்பனேடு வாதம் பெருமிதஞ்சேர்
தூல வுடலமுமாந் தூயறிவு மந்தமுறுங்
கோலவிழி குளிருங் கூறு.

(இ-ள்.) எருமைத்தயிருக்கு எரிச்சலும் பித்த நோயும் போகும் கபத்தைப் பற்றிய கரப்பான் வாதரோகம் அதிதூலரோகம் புத்தி மந்தங்கண்ணுக்கு குளிர்ச்சி ஆகிய இவைகள் உண்டாகுமென்க.

## வெள்ளாட்டின் தயிர்மோர் இவைகளின் குணம்

வெள்ளாட்டின் வெண்டயிரோ மிக்கனல மாகுமதற்
குள்ளாடை யான்மந்த முண்டென்பார்-வெள்ளாட்டின்
மேரோ மேகத்தை முதிரா தடித்துவிடும்.
பாரோ ரறியப் பகர்.

(இ-ள்.) வெள்ளாட்டின் தயிரால் அதிஉஷ்ணமும் அதன் ஏடால் மந்தமும் விளையும். மோரானது பிரமேகரோகத்தைப் போக்கும்.

## செம்மறியாட்டுத் தயிர்குணம்

செம்மறியின் றன்தயிரைத் தின்ன மதுரமிகுங்
கொம்மை முலை மாதரசே கூறக்கேள்.அம்ம
கரப்பான் சொறியுங் கடுப்பிரத்த வாய்வு
முரப்பா முடங்கெடுமென் றோர்

(இ-ள்.) இளமை பொருந்திய தனங்களையுடைய மாதரசே! மதுரமுள்ள செம்மறியாட்டின் தயிரை உண்டால் கரப்பான், சொறி மூலக்கடுப்பு ரத்தமூலம் வாதரோகம் ஆகிய இவைகள் பலப்படுவது மன்றிச் சரீரத்திற்குத் துன்பமுண்டாகுமென்க.

## ஒட்டைத்தயிர் குணம்

தீபனமு முண்டாஞ் சிறுகரப்பான் புண்ணுமாற்
பூபதி பொன்மேனி புளகிக்குந் தாபதமாம்
ஒட்டைத் தயிர்நிதமு முண்ணவதி தாகம்போந்
துட்டக் கிருமியறுஞ் சொல்.

(இ-ள்.) ஒட்டைத் தயிரைக் குடித்தால் ஜடராக்கினி சிறுகரப்பான் விரணம் சரீரமேனி இவை உண்டாகும், தாகமும் மலக்கிரிமி ரோகமும் நீங்குமென்க.

# மோர் வகை

## பசுமோர் குணம்

வீக்க மகோதரமுள் வீறுகுன்மம் பாண்டுபித்தந்
தாக்கு மருந்திட்டததி சாரமொடு கூக்குரலே
மாரூந் திரிதோஷ மந்தமனற் ருகம்போம்
வீருவின் மோருக்கு மெய்.

(இ ள்.) பசுவின் மோருக்கு வீக்கம் மகோதரம் வயிற்றுவலி பாண்டுரோகம் பித்தகோபம் இடுமருந்தால் வரும் நோய்கள் பேதி திரிதோஷம் அக்கினி மந்தம் வெப்பம் இவைகள் போமென்க.

## எருமைமோர் குணம்

தாகங் கிராணி சலங்கழிச்சல் காமாலே
ஆகங் குடைபுழுவு மற்றுப்போ-மோகமுறுந்
தேவா மிருதமுமாஞ் சீர்மானிடர் தமக்கு
மூவா மருந்தெருமை மோர்,

(இ-ள்.) எருமை மோரினல் தாகம் கிராணிரோகம் சலக்கழிச்சல் காமாலே கிருமி ஆகிய இவைகள் நீங்கும் போகவிருப்பமாம், சிறந்த மானிடர்களுக்கு கெடாதவமுதமாகுமென்க.

## ஒட்டை மோர் குணம்

ஒட்டைமோர் மெத்தவன லோங்கியவா தந்தணிக்குங்
கிட்டுமந்த நெய்ப்பெருமை கேட்பீரால்-நெட்டுலகின்
மந்தஞ்செய்தாலும் வலிவிந்து வைப்பெருக்கு
மந்தஞ்சேர் கண்ணு யறி

(இ-ள்.) ஒட்டைமோரானது பித்தவாத தொந்தத்தைச் சாந்தி செய்யும் அதன் நெய்யானது அக்கினிமந்தஞ் செய்வதாயிருந்தாலும் சுக்கிலதாதுவை விருந்திசெய்யுமென்க.

[தொடரும்

# திருக்குறளும் தொழில் வளர்ச்சியும்

## (திருக்குறள் காட்டும் மருத்துவம்)

டாக்டர் லலிதா காமேஸ்வரன்,

மருந்தியல் துறைப் பேராசிரியர், சென்னை மருத்துவக்கல்லூரி

சென்னை - 600 003.

(சென்ற இதழின் தொடர்ச்சி)

'நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கும் மருந்து — குறள்' 1241.

என்றிவ்வாறு பலவிடத்தும் 'நோய்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

உடை, உண்டி, வெப்ப தட்ப நிலைகளில் மாற்றம், இடப்பெயர்ச்சி போன்ற பலபுறநிலைக் காரணங்களாலும், உள்நிலை மாற்றங்களாலும் தாக்கப்படுவதால், உடல், பிணிக்கு இடமளிக்கிறது. உடல் இயற்கைப் பொருளினால் ஆனது. இவ்வியற்கைப் பொருள்கள், அல்லது தாதுக்கள் குறிப்பிட்ட அளவில், சேர வேண்டிய முறையில் சேர்ந்து இயங்குவதால் உடல் சீரான நிலையில் இருக்கின்றது. இந்த விகிதாசாரங்களில் எந்தப் பொருளாவது அளவில் மாற்றமடைந்தால், உடல் நிலையில் மாற்றம் ஏற்படக் கூடும். (Disturbance Of Internal Homeostasis) இன்றைய ஆராய்ச்சியின் அடிப்படையில் உடலில் இருக்கும் தாதுப் பொருள்களைப் பலநூறு பொருட்களாக ஆராய்ந்து கணக்கெடுத்திருக்கிறார்கள். எனினும் இந்தப் பொருள்கள் இருக்க வேண்டிய அளவினின்றும் குறைந்தாலும் கூடினாலும் (Excess or deficiency) நோய்க்குக் காரணமாகும், என்பதை, இன்றைய மருத்துவர்களும் ஒப்புக் கொள்கிறார்கள். அந்த கருத்தே மருந்து என்ற அதிகாரத்தின் முதற் குறள்.

'மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று — குறள். 941.

'வளிமுதலா எண்ணிய மூன்று' என்ற தொடருக்கு அநேகமாக எல்லோருமே வாதம், பித்தம், கபம், ஆகிய மூன்று என்ற பொருளை ஒப்புக் கொள்கிறார்கள், தமிழ் மருத்துவ நூல்களில் இவை மூன்றையும் ''முக்குணங்கள்'' என்றும் 'முக்குற்றங்கள்' என்றும் குறிப்பிடக் காண்கிறோம். அநேகமாக உலகெங்கிலும், பண்டைய மருத்துவ நூல்களில் எல்லாம், இந்தக் கருத்தே மருத்துவத்தின் அடிப்படைக் கருத்தாக

அமைந்திருக்கிறது. இது ஆங்கில நூல்களில் (Theory of three humours) என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஆங்கில நூல்களில் இவைகளை Air, Fire and water என்றும் வடமொழி நூல்களில் வாதம், பித்தம், கபம், என்றும் தமிழ் மருத்துவ நூல்களில் வளி, தீ, ஐ என்றும் குறிப்பிட்டிருப்பது ஒத்து நோக்குதற்குரியது. எனினும் திருக்குறளுக்கு உரையாசிரியர்கள் அனைவருமே ' மிகினும் குறையினும் நோய் செய்யும் ' என்று சொற்றொடருக்கு, உணவும் செயலும் உடம்பின் அளவிற்கு மிகுந்தாலும், குறைந்தாலும் நோய் செய்யும் என்று பொருள் கொண்டிருக்கின்றனர்.

நூலோர் வளி முதலா எண்ணிய மூன்று மிகினும் குறையினும் நோய் செய்யும் என்று பொருள் கொள்வதே முறை. மருத்துவக் கொள்கைக்கு ஏற்றது. ஏனெனில் வளி, தீ, ஐ ஆகிய மூன்று பொருள்களின் அதாவது உடலில் இயற்கையாய் அமைந்த தாதுப் பொருட்களின், அளவில் மாற்றம் புறநிலை மாற்றங்களாலும் உளநிலை மாற்றங்களாலும் ஏற்படக் கூடும். புறநிலை மாற்றங்கள் ஐம்புலன்களின் வழியாக உளநிலை, உடல் நிலை ஆகிய இரண்டையும் மாற்றக்கூடும் என்பது.

சுவைஒளி ஊறுஓசை நாற்றம் என்றுஐந்தன்
வகை தெரிவான் கட்டேஉலகு. — குறள். 27.

என்ற குறளால் உணரப்படும் 'நூலோர்' வளி முதலா எண்ணிய மூன்று என்று வள்ளுவர் குறிப்பிட்டதனாலேயே, தமிழ் மருத்துவ நூல்களிலும் முக்குணங்கள் என்ற கொள்கையே அடிப்படைக் கருத்தாகும் என்றுதோப்படும். 'நூலோர்' என்ற சொல் வள்ளுவருக்கு முன்னதாகவே மருத்துவ நூல்கள் இருந்தமையைக் காட்டும்.

தமிழ் மருத்துவ நெறியின் அடிப்படைக் கருத்தை வலியுறுத்தும் குறள்.

' நோய் நாடி, நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல் — குறள்' 948.

பிணியறியும் முறையே நோய் நாடல் (ஆங்கிலத்தில் ' Diagnosis ' எனப்படும்) நோய் முதல் நாடல் என்பது நோயின் காரணத்தைக் கண்டறிதல் (Determining the etiology or causation of disease) அது தணிக்கும் வாய் நாடல் என்பது பிணிதீர்க்கும் வகைகளை ஆராய்ந்து ஓர்த்து அறிதல் (Deciding the methods of treatment) என்பதையும் வாய்ப்பச் செயல் என்பது ஓர்த்துத் துணிந்த முடிவின்படி வழுவின்றி சிகிச்சை செய்தல் என்பதையும் உணர்த்தும்.

'மருந்து' என்ற அதிகாரத்தில் 'நாடி' என்ற சொல் இந்த ஒரு குறளில் தான் வருகிறது. நாடி என்றது, ஆராய்ந்து தேடி, அதாவது நாடல்செய்து, என்ற பொருளில் வந்தாலும், தமிழ் மருத்துவத்தில் பிணியறியும் முறைகளில் நாடி பார்த்தல், என்பது முக்கியமான ஒரு வழி, என்ற உட்பொருளை உணர்த்தும் வகையில், அச் சொல்லை மீண்டும், மீண்டும் இக்குறளில் அமைத்திருப்பது ஒரு சிறப்பு.

பதினெண் சித்தர்கள் நாடி சாஸ்திரத்தில் 'நாடியால் முன்னோர் சொன்ன நல்லொலி பரிசத்தாலும் நீடிய வழியினாலும் நின்ற நாக்குறிப்பினாலும், வாடிய மேனியாலும் மலமொடு நீரினாலும், சூடிய வியாதி தன்னை சுகமுடன் அறிந்து பாரே' — அகத்தியர் நாடி — 24.

என்ற பாவினால் நோய் நாடுதல் என்பது நோய்க் குறிகளை ஆராய்ந்து பார்த்து அதன்படி அனுமானிக்கப்பட வேண்டியது என்பதை உணர்ந்திருந்தனர் என்பதைப் புலனாக்கும்.

உற்றான் அளவும் பிணி அளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல் — குறள். 949.

என்பது அடுத்த குறள். நோயுற்றவனின் அளவிற்கேற்பவும், பிணியின் அளவிற்கேற்பவும், நோயுற்ற காலம், மருந்தளிக்கும் காலம். இவைகளை மருத்துவ நூல் கற்றோன், கருதிச் செயல் வேண்டும், என்று பொருள் கொண்டார்கள், உரையாசிரியர்கள். 'உற்றான் — அளவு' என்பதற்கு, உற்றவனின் வசதிக்கும் வளத்திற்கும் ஏற்ப என்று பொருள் கொண்டிருப்பதை விட மருத்துவ அடிப்படையில் நோயாளியின் வயதின் அளவு, உடல் வலிமையின் அளவு, நோய் எதிர்ப்புச் சக்தியின் அளவு, இவற்றை உணர்ந்து, என்று கொள்வதே இக்காலத்திற்கும், எக்காலத்திற்கும் பொருத்தமுடையதாகும். சமதர்ம சமுதாயங்களில் மருந்தும் மருந்துவ வசதியும், உற்றவனின் செல்வத்தையும், வசதியையும் பொறுத்ததல்ல. கற்றவன் கருதிச் செயல் — என்றதால் மருத்துவர்கள் மருந்துகளைப் பற்றிய செய்திகளையும் சிகிச்சைமுறைகளையும் முறையே கற்றுத் தேர்ந்தவர்கள் என்பதும் பெறப்படும்.

(தொடரும்)

தாம்பரம் அருகே

## ஏமாற்றி மயக்க ஊசி போட்டு பையனுக்கு குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன்

சென்னை, ஜூலை, 24— தாம்பரம் அருகேயுள்ள ஒரு வைத்திய நிலையத்தில் 16 வயதுப் பையன் ஒருவனை ஏமாற்றி மோசடியான நிலைமையில் குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் செய்திருப்பதாகப் புகார் கொடுக்கப்பட்டிருக்கிறது.

புல்கான் என்பவன் ஓர் அன்றாடக்கூலி... 16 வயதுப் பையன். சேத்துப்பட்டைச் சேர்ந்தவன். தாம்பரத்திலுள்ள கடைகளுக்கு சிறு மூட்டைகளில் அரிசியைச் சுமந்துகொண்டு போடுவது அவன் வேலை. சனிக்கிழமையன்று அவன் வேலை முடிந்து திரும்பிக் கொண்டிருந்தான். அப்போது திடீரென ஓர் ஆசாமி அவனையணுகி கூலி வேலைக்கு வருமாறு அழைத்துச்சென்றான் பின்பு பையனை ஒரு ஜீப்பில் அழைத்துச் சென்றார்கள். அந்த ஜீப்பில் மேலும் 10 பேர்கள் இருந்தார்கள. அவர்களில் ஒருவன் பக்கத்து வைத்திய நிலையத்துக்கு அழைத்துச் சென்றான். அங்கு அவனுக்கு ஓர் ஊசி போட்டார்கள். உடனே அவன் மயக்கமடைந்து விட்டான். சிறிது நேரங்கழித்து உணர்வு திரும்பி பார்த்தபோது தனக்கு ஆபரேஷன் நடந்திருப்பது அவனுக்குத் தெரிந்தது. தனக்கென்ன ஆபரேஷன் நடந்ததென்று அவனுக்குத் தெரியாது. அது குடும்பக்கட்டுப்பாடு ஆபரேஷன் என்பது பின்னால் தான் தெரிந்தது.

பின்பு பையன் சிகிச்சைக்காக கீழ்ப்பாக்கம் ஆஸ்பத்திரிக்கு வந்தான். ஆஸ்பத்திரி டாக்டர் இது சம்பந்தமாகப் போலீசுக்கு ஒரு புகார் கொடுத்திருக்கிறார்.

—தினமணி ஜூலை-24 செய்தி

# இன்றைய மருத்துவருக்கு புரியாத அதிசயம்!

மூலம் : The Mirror தமிழில் : ருக்மணி வேங்கடேசன். B.A B.T

மருந்தும் மந்திரமும் நோயாளிகளுக்கு மரண பயம் போக்கும் இருபெரும் நம்பிக்கைச் சுடர்களாகும். பண்டைக் காலத்திலிருந்தே தமிழ் நாட்டில் மட்டுமின்றி உலகெங்கிலும், நோய்களைக் குணப்படுத்துவதில் மருந்துக்கு இணையாக, மந்திரமும் உரிய சாதனமாகக் கருதப்பட்டு வருகிறது. 2000 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழ் நூலான சங்க இலக்கியத்தில் 'காதல் வயப்பட்ட பெண்கள்' மெலிந்து வாடுவதையுணர்ந்த தாயர்கள், அவர்கள் உடம்பு குணம் பெற முருகனுக்குநேர்ந்து கொண்டு பூஜை செய்து வழிபாடு செய்வதைப் பற்றிய பாடல்களைக் காணலாம். இன்றும் கூட, அம்மை, கைகால் முடக்கம், கண் கோளாறு போன்ற பல நோய்களுக்கு ஆலய பிரார்த்தனைகள் தீர்வாக அமைவதை அறியலாம். இந்தச் செய்திகள் நம் நாட்டிலுள்ள படித்துப் பட்டம் பெற்ற நவீன மருத்துவர்கட்கு- மூட நம்பிக்கைகளாகவே காட்சியளித்தன. ஆனால் வெளி நாட்டிலும் இது போன்ற நம்பிக்கைகள் நடைமுறையில் இருப்பதை அறிந்த நவீன மருத்துவர்கள்- இதனைப் 'புரியாத அதிசயம்' என்று கருதுகிறார்கள். Man the unknown' எனும் புகழ் பெற்ற நூல் எழுதி நோபல் பரிசு பெற்ற அலெக்ஸிஸ் காரல் போன்ற மருத்துவ மேதைகளைக் கூட 'புரியாத அதிசயம்' என திகைக்க வைத்த இத்தகைய உண்மைச் சம்பவங்களைக் கொண்ட ஆங்கிலக் கட்டுரை ஒன்று 'The wonder of the miracle cures at Lourdes' எனும் கட்டுரை "TheMirror" எனும் திங்களிதழில் வெளி வந்தது. மூலிகைமணி வாசகர்கட்காக, இக்கட்டுரையை மொழி பெயர்த்து தமிழில் வெளியிடுவதில் மகிழ்ச்சியடைகிறோம்.

இன்னும் சில நிமிட் நேரங்கள் கூட உயிருடன் இருப்பது அரிது என்று தான்கருதிய, தன்னுடைய நோயாளி ஒருவனைப் பூரண சுகத்துடன் கண்ட நோபல் பரிசு பெற்ற மருத்துவர் ஒருவர் "இறந்தவர்க்கும் உயிர் அளிக்கக் கூடிய மாபெரும் விந்தை" என்று தன்னுடைய புத்தகத்தில் இந்நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுள்ளார்.

'என்ன நிகழ்ச்சி அது' என்று தெரிந்து கொள்ள உங்களுக்கும் ஆர்வமாக இருக்கிறதா? கேளுங்கள்!

பிரான்ஸ் நாட்டில் ஸ்பெயின் எல்லைக்கருகில் உள்ள லூர்தஸ் என்னுமிடத்தில் தான் இந்த அதிசயம் நடக்கிறது.

ஒவ்வொரு வருடமும் இரண்டு மில்லியன் நோயாளிகள் உலகத்தின் எல்லா பாகங்களிலும் இந்த இடத்திற்கு வருகிறார்கள். அவர்களில் நாட்பட்ட நோயாளிகள், தீர்க்க இயலாத வியாதியஸ்தர் என்று கைவிடப்பட்ட நோயாளிகள் பலரும் உண்டு. அத்தகைய தாங்க வொண்ணு நோயுடன் வரும் அந் நோயாளிகள் இந்த புனித ஸ்தலத்திற்கு வந்தவுடன் தங்களின் நோயில் பாதி குறைந்து விட்டதாக ஒரு எண்ணம் அவர்களுக்கு!

ருத் கிரான்ஸ்டன் (Ruth cranston) என்னும் பத்திரிகையாளர், இந்த உண்மையை அறியும் ஆவலுடன் லூர்தஸ் சென்று அங்கு நோயாளிகளுடன் தங்கி பேசி அவர்கள் நோய் குணம் கண்டு சென்றதை கண்கூடாகக் கண்டு "லூர்தஸ்ஸில் அதிசயம்" The mystry of Lourdes என்ற ஒரு புத்தகத்தை எழுதியுள்ளார். அதனை லண்டனைச் சேர்ந்த இவான்ஸ் பிரதர்ஸ் என்னும் பிரசுரத்தார் வெளியிட்டுள்ளனர்.

இதே போலவே நோபல் பரிசு பெற்ற மருத்துவர் டாக்டர் அலெக்ஸிஸ் கேரல் 1903-ம் ஆண்டு லூர்தஸ்க்குச் சென்று அங்கு நடக்கும் அதிசயங்களைக் கண்டு புத்தகம் எழுதி வெளியிட்டுள்ளார். இவரேயன்றி பலரும் மருத்துவ அறிவிற்குப் புலனாகாமல் நோய்க் குணப்படும் விந்தையைக் காண அவ்விடத்திற்குச்சென்று அந்த விந்தையைக் கண்டு வியந்து திரும்பியிருக்கிறார்கள்.

ஒரு நாளைக்கு குறைந்தது 22 புகை வண்டிகளில் நோயாளிகள் இந்த தலத்திற்கு வருகிறார்களாம். சில வேளைகளில் அந்த "கைவிடப்பட்ட" நோயாளிக்கு சிகிச்சையளித்த டாக்டரும் உடன் வருவதுண்டு. ஆபத்தான நிலையில் வரும் அந்த நோயாளிகள் புகை வண்டியில் வந்து இறங்கியதும் தாதியர்கள் அவர்களை ஸ்டெச்சரில் படுக்க வைத்து தூக்கிச் செல்கின்றனராம், அவர்களை அங்குள்ள புனித நீர் ஊற்றில் நீராட்டுகின்றனர். உடன் சென்றவர்களும் அப்புனித நீரை தலையில் தெளித்துக் கொண்டு பாட்டில்களிலும் பாத்திரங்களிலும் அடைத்து பத்திரப்படுத்தி வைத்துக் கொள்கின்றனராம்.

புனித மேரியன்னை, ஒளிவிடும் ஆயிரமாயிரம் மெழுகு வர்த்திகளின் மத்தியில் சாந்தம் தவழும் முகத்துடன் அங்கு வீற்றிருக்கிறார்.

கன்னிமேரி 1858-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 11-ந் தேதி பதினான்கு வயதுள்ள பெர்னடெட் என்ற விவசாய பெண்ணுக்குக் காட்டில் சுள்ளி பொறுக்கி வரச் சென்ற போது காட்சியளித்து அங்குள்ள நீரை குடிக்குமாறு கூறினார்களாம். இளமையிலிருந்தே மிகவும் பக்திநிறைந்த அப்பெண்ணிடம் அதற்கப்பாலும் பலமுறை தோன்றி தனக்கு ஒரு கோவில் கட்டச் சொல்லி அங்குள்ள மதகுருவிடம் சொல்லச் சொன்னார்களாம். அந்த பெண்ணின் வார்த்தையை விளையாட்டென எண்ணி நம்பாமல் இருந்த உள்ளூர் அதிகாரிகள் அவளை அந்த இடத்தை அடையாளம் காட்டச் சொன்னார்களாம். அந்த பெண்ணும் தனக்கு கடவுள்

அடையாளமிட்டுக் காட்டிய இடத்தில் தரையைத் தோண்ட நீர் ஊற்று பீறிட்டுக் கொண்டு வந்ததாம். அந்நீர் ஊற்றில் முதன்முதலில் குருடன் ஒருவன் தன் கண்களைக் கழுவிட பார்வையினை திரும்பப் பெற்ருனும். இதே போல கால்கள் இரண்டும் விளங்காமல் போய்விட்ட சிறுவன் ஒருவன் ஊற்றில் குளித்ததும் எழுந்து நடந்திடும் வலிமை பெற்ருனும்.

இதிலிருந்து உலகெங்கும் இச்செய்தி பரவி மருத்துவ உலகில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தி விட்டது. இந்த அதிசயத்தினை ஆராய ஒரு குழு அமைக்கப்பட்டு அவர்களும் பெர்னடெட் எனும் அப் பெண்ணை பேட்டி கண்டு, அந்தப் புனித தலத்தில் நிகழும் அதிசயங்கள் உண்மையே என ஆய்ந்தறிந்தனராம்.

அன்றிலிருந்து பல நாட்டைச் சேர்ந்த பிரபல மருத்துவர்களும், ஆய்வாளர்களும் லூர்தஸ்ஸில் நடக்கும் புரியாத அதிசயத்தைக் காண படையெடுத்து வருகின்றனராம். இன்று வரையில் மருத்துவரால் கைவிடப்பட்ட தீராத நோய்களும் இப் புனித நீர் ஊற்றில் நீராடியதும் நோய் நீங்கப் பெறுவது புரியாத புதிராக தெரியாத உண்மையாக இருந்து வருகிறது.

டாக்டர் அலெக்ஸிஸ் கேரல் இந்நகருக்கு சென்று உண்மையைக் கண்டறிய நோயாளிகள் செல்லும் அப் புகை வண்டியில் சென்ருராம். அப்போது அந்த வண்டியில் வந்த மத குருமார்கள் ஒரு பெண்மணியின் உடல் நிலையை கவனிக்குமாறு வேண்டினராம். மேரி பெரான்ட் என்ற பெயருடைய அப் பெண் வெளுத்த முகத்துடனும், வீங்கிய வயிறுடனும் மூச்சு விடவும் திணறிய நிலையில் படுத்திருக்கக் கண்ட அவர் தன் நோயாளியை சோதனை செய்ய ஆரம்பித்து அவளுக்கு டி. பி. நோய் என்றும் வயிற்றில் அங்கங்கே திட்டுத் திட்டாக திரவம் சேர்த்து வயிறு பெருத்து உள்ளது என்றும் அறிந்து மயக்க மருந்து கொடுத்து தூங்க வைத்தாராம். புகை வண்டி லூர்தஸ் சென்றதும் அப் பெண்ணை ஸ்டெச்சரில் வைத்து தூக்கிச் சென்றனராம். டாக்டர் கேரனும் இன்னொரு மருத்துவரும் சேர்ந்து அவளை மீண்டும் சோதித்து அவள் இன்னும் சில நிமிடங்களில் இறந்து விடுவாள் என்றனராம்.

ஆனல் அக் கோயிலில் இருந்த கன்னியாஸ்திரி அவளை படுக்க வைத்து ஜெபித்தனுப்பி, ஊற்றில் நீராட்டுமாறு பணித்தாராம். ஆனல் டாக்டரோ ஊற்றுவரை கூட எடுத்துச் செல்ல முடியாத நிலையில் அப் பெண் கன்னியா ஸ்திரியின் கட்டளைப்படி அப்பெண்ணை ஊற்றில்நீராட்ட தாதியார் தூக்கிச் சென்ற போது டாக்டர்கள் இருவரும் மூச்சு விடவும் மறந்தவராகி அவளை கண்காணிக்க ஆரம்பித்தனராம். அப் பெண்ணை நீராட்டிய பின் அவள் பார்வையில் ஒரு தெளிவு! முகத்தில் ஒரு பிரகாசம் கை, கால்களில் அசைவு! வயிற்றின் மீது போர்த்திய போர்வை மெதுவாக உள்ளே படிந்து செல்வதைப் போல இருந்ததாம். சிறிது நேரத்தில் தாதி கொடுத்த 1 குவளை பாலை ஒரே மூச்சில் வாங்கிக் குடித்துவிட்ட அந்தப் பெண் மெதுவாக எழுந்து நின்ருளாம். பெருத்திருந்த வயிறு சாதாரண நிலைக்கு வந்து விட்டதாம்.

டாக்டர் கேரல் ஓடிச் சென்று அவள் வயிற்றில் கை வைத்து சோதித்துப் பார்த்தாராம்! என்னே ஆச்சரியம்! அவள் வயிற்றில் திட்டு திட்டாக திரவம் சேர்ந்திருந்த அடையாளமே இல்லையாம். மூச்சு நன்ருக விட முடிந்து நல்ல நிலையை பெற ஆரம்பித்து விட்டாளாம்.

டாக்டரால் பேசவே முடியவில்லை! அவ்வளவு திகைப்பு! வாழ்க்கையிலேயே தான் முதல் முறையாக ஊமையாகி விட்டதைப் போல உணர்ச்சியடைந்தார் அவர்.

அவர்தான் தனது "The voyage to lourdes" எனும் புத்தகத்தில் 'இறந்தவர்க்கும் உயிர் அளிக்கக் கூடிய மாபெரும் விந்தை' என்று குறிப்பிட்டுள்ளார்.

அது சரி! அங்கே செல்பவர்கள் எல்லோரும் நோய் நீங்கப் பெறுகிறார்களா என்றும் சிலர் கேட்பீர்கள். ஏதோ ஆயிரத்தில் ஒன்று பரமனடி சேர்ந்து விடுவதும் உண்டு. ஆனால் அவர்களும் நோயின் கோரமான, கொடூரமான பிடியிலிருந்து தப்பி அமைதியான முறையில் தமது வாழ்க்கைப் பயணத்தை முடிக்கிறார்கள். ❀

# தமிழ்த் திருமணம்

[ கி. இராமலிங்கனார் எம்.ஏ., ]

## செய்முறையும் - விளக்கமும்

(சென்ற இதழின் தொடர்ச்சி)

### II செய்முறை விளக்கம்

சோலையிலே இருவரும் உளங்கலந்து, திருமணம் பூரண உறுதி செய்து கொள்வதே, பண்டைய நாளில் தமிழகத்தில் நடந்தது. பிறகு பெற்றோரின் ஒப்புதல் பெறுவர். அதற்கு வாயிலாக அமைவதே; மண மக்கள் அவரவர் பெற்றோர்களுக்கு திருவடி பூஜை செய்து வணங்குவது.

பெற்றோரில் ஒருவரோ, இருவருமோ இல்லாத போது, பெற்றோர் நிலையில், கணவன் மனைவியுமாக இருக்கும் இருவர், பாத பூசை செய்து கொள்வர்.

ஓம்படை செய்தல், சங்க காலச் செய்யுள்களில் பொறிக்கப் பெற்றுள்ள ஒரு வழக்கு.

மற்ற முறைத் திருமணங்களிலே, நடைபெறும் கன்னியத்தாரை வளர்த்துத் தத்தம் செய்வது அன்று. மணமகனும் மணமகளும் ஒத்த நலங்கள் உடையவர்கள் ஆதலின். பெண்ணை மாப்பிள்ளைக்கு 'தானம்' செய்வது தமிழ் மரபுக்கு முற்றும் மாறானது. பெண் ஒரு சாமான் அன்று, தானம் செய்து வருவதற்கு. அவள் ஆறு அறிவு படைத்த உயர் திணையினள். பெண்ணை ஆணுக்கு அடிமையாக்கல் தமிழ் வழக்கிலில்லை.

இறைவனை மணமக்கள் வழிபடுவதற்கு விளக்கம் தேவையில்லை. இருவரின் வாழ்விலும் ஈடு எடுப்பற்ற ஓர் இன்ப நிகழ்ச்சி நடைபெறு வதற்கு, அவர்களைப் போலவே, ஆணும் பெண்ணுமாக அங்கிங்கெனாத படி விளங்கும் எல்லாம் வல்ல பரம்பொருளை இங்கித மண அறையில வணங்குவது இன்றியமையாதது அன்றோ?

மங்கல நாண் ஒரு தேங்காய் மேல் சுற்றப் பெற்றிருக்கும். தேங் காய் ஆடாதபடி, அரிசியின் மீது அது பொருத்தப் பெற்றிருக்கும். அவையினர் தாலியைத் தங்கள் இரு கரத்தாலும் தொட்டு, தூய சிந்தனை யோடு வாழ்த்துவதற்கு ஏற்றபடி பொன் தாலி மேல் புறமாக அனைவர் கண்களிலும் படும்படி இருக்கும். திருமணத்திற்கு இன்றியமையாத அடை

யாளமாக வந்துவிட்ட தாலியைத் தொடுவதால், திருமணம் நடந்ததற்கு அவையினர் சான்ருகின்றனர்.

மங்கல நாண் சூட்டும்போது, கெட்டிமேளம் அடிக்குமாதலின், அவையினரின் நினைவு, தாலி கட்டும் நிகழ்ச்சிக்கு ஈர்க்கப்பெற்று, கையில் எடுத்து வைத்துள்ள மஞ்சள் அரிசி மலரைத் தூவி, தாலி கட்டியதற்கு நற்சான்ருகவும் அவையினர் ஆவர்.

அழல் ஓம்பல், இறைவனை ஒளி வடிவில் போற்றுவதற்குத் துணையாவது இறைவன் ஐந்து பெரும் பொருட்களான நிலம், நீர், நெருப்பு, காற்று, ஒளி இவற்றில் ஊடுருவித் தங்கியுள்ளான் என்னும் உண்மையை சிந்தனை செய்து, நிலத்தின் மீது நீர் நிரம்பிய இரு கலசங்கள் வைத்து, எதிரே நெருப்பை வளர்த்து வழிபடுவது இயற்கைக்குப் பொருத்தமாவதே. காற்றும் ஒளியும் முன்னைய மூன்றுள் கலந்தனவாகும் ஆதலின் ஐம்பூதங்களிலுமே, இறைவனை உணர்ந்து போற்றுவதற்கு அம்மையப்பர் வழிபாடும், ஓமமும் வாயிலாகின்றன.

அழல் ஓம்பல் பண்டைய நாளில், தமிழ்த் திருமணங்களில் இடம் பெற்றிருந்ததா என்பது ஆராய்ச்சிக்குரியதேயாயினும், ஒளி வழிபாடு சிறந்தது என்பதை எண்ணி இதனை மண நிகழ்ச்சியில் ஓர் இனமாக வைத்துக் கொள்வது அறிவுக்கு உகந்ததே.

இரண்டாவது ஒரு முறை ஓமம் வளர்ப்பது னோய், குறை, பிற குறைகளைத் தீயின் முன் தூசு போல் அகலச் செய்ய இறைவன் அருளைத் தீவடிவில் வழிபடுவதற்காகும்.

மங்கலநாண் சூட்டும்போது, மணமகன் உடன் பிறந்தாள் கை விளக்கு ஏந்தி நிற்பது, பந்தரில் சூழ்ந்திருக்காற்போல இருட்டையகற்றி ஒளியளிக்கப் பயன்படுவதோடு, தாலி கட்டியதற்குத் தக்க சான்ருக மாப்பிள்ளையின் அக்கா தங்கையே அமையவும் ஏற்பாடு செய்ததாயிற்று.

தமிழ் மணத்தாலி புலிப்பல் போன்றது. மணமகனின் வீரத்துக்கு அடையாளமாக, அவன் புலியைக் கொன்று கொண்டு வந்ததாகக் கருதி தன் பொருட்டே இன்றும், தாலி புலிப்பல் வடிவில் செய்யப்படுகிறது.

மங்கல நாண் சூட்டியதும், மணமகன் மணமகளின் நெற்றியில் குங்குமம் வைப்பது, மங்கல அடையாளமாக இருப்பதுடன், மணமகளை கழுத்தருகே அணைத்து தலையைத் தொடவும் வாய்ப்பளிப்பதாக இருக்கின்றது இதுவே முதல் தடவையாக, மாப்பிள்ளை பெண்ணைத் தொடுவதாகும்.

(தொடரும்)



# அனுபவம் உணர்த்தும் உண்மை



## "ஆபரேஷன் கட்டம் நீங்கியது"

K.. ராமகிருஷ்ணன்
49, விசய நகர், சென்னை - 600 039

பெங்களூரில் அசோக் நர்சிங் ஹோம் என்று ஒரு பிள்ளைபேறு மருத்துவமனை இருக்கிறது. அதை நிர்வாகம் செய்துவரும் கணவன்—மனைவி இருவரும் ஆங்கில மருத்துவர்கள் ஜெர்மனியில் படித்து பட்டம் பெற்று பெங்களூரில் தொண்டுள்ளத்துடன் தனியாக மருத்துவமனையை நடத்தி வருகின்றனர்.

அங்கு நமது வாசக அன்பர் திரு. சுப்புராவ் அவர்கள் தனது மருமகள் சாந்தா (22 வயது) K. ராமகிருஷ்ணன் அவர்களின் மனைவி பிரசவத்திற்காக சேர்த்து இருந்தார். பிரசவ வேதனை நெடுநேரம் ஆகியது. இக்கட்டான நிலை டாக்டர் இறுதியாக சுகப்பிரசவம் ஆகாது ஆபரேஷன் தான்- இல்லாவிடில் பிழைக்க முடியாது என ஜெர்மனியில் பயின்ற டாக்டர்கள் கூறி விட்டனர். பிறகு சுப்பு ராவ் அவர்கள் அந்த் டாக்டர் அம்மையாரிடம் ஒரு மூலிகையை கொண்டு வந்து காலில் கட்ட அனுமதி கேட்டார். அவர்களும் இவர்களின் வேண்டுகோளுக்கு தடையேதும் சொல்லவில்லை. உடனே அந்த காம்பௌண்டுக்கு அருகே முளைத்திருந்த கீழாநெல்லிச் செடியைக் கொண்டு வந்து பயபக்தியுடன் வலது கால் பெருவிரலில் சுற்றினாராம். என்ன ஆச்சர்யம்! ஆப்பரேஷனுக்கு ரெடியாகி விட்ட சமயம் தியேட்டருக்கு எடுத்து போக கூட அவகாசமில்லை. அங்கேயே சுகப்பிரசவம் ஆனதாக சாந்தாவின் புருஷர் திரு. K. ராமகிருஷ்ணன் கூறக் கேட்டோம்.

   

M. Sankararaj Bsc. Bt.
Selvavinayagar Koil Street,
South St. Aruppukkottai Po.
Pin : 626101. Ramnad Dt.

ஐயா,

தங்களின் 'அவுரித் தைலத்தை' தொடர்ச்சியாக உபயோகித்து வந்தேன். இப்பொழுது எனக்குத் தலைமயிர் உதிர்வது முற்றிலும் நின்று விட்டது. தலைமயிர் பாதுகாப்பிற்கு,அதைத் தொடர்ச்சியாக உபயோகிப்பது என்று தீர்மானித்திருக்கிறேன்.

இப்படிக்கு
எம். சங்கரராஜு

# நேத்திரப் பூண்டுத் தைலம்

A. Natesan,
No. 5, Ramanaicken Street,
Tindivanam, S. A. Dt.

Sir,

I have been using your Nethira Punduth Thailam for eyes, for some time. I found it to be very efficacious. There is no difficulty of any kind to my eyes. I am able to see perfectly. I thank you for having prepared such a good and useful medicine for the public and particularly for an aged man like me. I am now eighty three years aged.

Thanking you,

Yours faithfully,
A. Natesan

S. V. சீனிவாசன்
16, ஈஸ்வரன் கோயில் தெரு,
கோபிச்செட்டி பாளையம், ஈரோடு.

அன்புடையீர், வணக்கம்

நான் தங்கள் நேத்திரப்பூண்டுத் தைலம் உபயோகித்து (22-4-76 முதல் 15-6-1976 முடிய) வந்தேன். அதில் எனது கண் குறை ஓரளவு நிவர்த்தி ஆகியுள்ளது. மேலும் நான் (—10 Short Sight) கண் கண்ணாடி அணிந்து (1956 முதல் 1976) 20 வருடம் உபயோகித்து நல்லபடியாகத் தான் இருந்தது. ஆனால் கடந்த 1975லிருந்து அந்த கண் கண்ணாடி எனக்கு பொருத்தமாக அமையவில்லை. கோவையிலுள்ள ஆங்கில நல்ல டாக்டர் (qualified) நாடி பரிசோதித்ததில் கண் நரம்புகள் கெட்டு விட்டன என்றும் சொல்லி A வைட்டமின் மாத்திரை சாப்பிடும்படி சொல்லி விட்டார்கள்.

பிறகு தான் நான் உங்களிடம் கடிதம் மூலம் நேத்திரப் பூண்டு தைலம் பெற்று உபயோகித்தேன். எழுத படிக்கக் கஷ்டமாக இருந்த எனக்கு இந்த தைலம் என்னுடைய குறையை நிவர்த்தி செய்துள்ளது.

பக்கத்து (கிட்ட பார்வையில்) பொருள்கள் நன்றாகத் தெரிகின்றன. தூரப் பார்வை மங்கலாக பக்கம் நெருங்கி வர வர நன்றாகவும் தெரிகிறது.

இப்படிக்கு
S. V. சீனிவாசன்

---

வெளியிடுபவரும் ஆசிரியரும்; வேலூர் மருத்துவர்
ஆ. இரா. கண்ணப்பர், R M P, 7, அருளாம்பாள் வீதி, தி. நகர்
சென்னை - 600 017. மூலிகைமணி அச்சகத்தில் அச்சிட்டவர்:
K. பாபு, D.M E., சென்னை - 600 030.